

உணர் மனம் என்றால் என்ன?
இறைவனிடம் பொறுப்புகளை ஒப்படைப்பது எப்படி?
இறைவனும் நமது முழு மனதும் (Total Mind) ஒன்றா வேறுவேறா?
கடமையை செய், பலனை எதிர்பாராதே. – பகவத் கீதை.
இதை எப்படி செயல்படுத்துவது? விடையும் விளக்கமும் 3ஆம் பக்கம்...



# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

ஞானியர் அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.

தற்போது ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நேரடியான முகாம் நடத்த முடியாத இந்த சூழ்நிலையிலும் ZOOM meeting வாயிலாக நாம் ஒவ்வொரு நாளும் சத்சங்கம் நடத்திவருகிறோம்.

நமது ஞானப் புரிதல், பலவகையான மன நோய்களுக்கும் தீர்வாக அமைவதால், சென்ற ஜுலை மாதத்தில் 24, 25 ஆம் தேதிகளில் zoom meeting மூலமாக இரண்டு நாள் மன நல வாழ்வியல் முகாம் நடைபெற்றது. இதில் பலர் கலந்துகொண்டு பயனடைந்தனர்.

மேலும் ஆகஸ்ட் மாதம் 27ஆம் தேதி முதல் 29 ஆம் தேதி வரை மூன்று நாட்கள் ஞான முகாம் நடைபெற உள்ளது.

முதல் ஞான முகாமை ZOOM Meeting வாயிலாக ஆரம்பித்தபோது இது நேரடி ஞான முகாம் அளவுக்கு பயனுள்ளதாக இருக்காது என்று எண்ணினோம். ஆனால் zoom meeting வழியாக நடத்திய ஞான முகாம், நாம் எதிர்பார்த்ததைவிட மிகவும் பயனுள்ளதாக இருந்தது. கலந்து கொண்ட அனைவரும் 100% பயனடைந்தனர். அதன் காரணமாகவே அடுத்ததாக ஐந்தாவது ஞான முகாம் நடைபெற ஏற்பாடு செய்துள்ளோம்.

இதில் **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்களுடன் நமது ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர் **ACU. Hr. உமர் பாருக்** அவர்களும் ஒரு உரை நிகழ்த்த உள்ளார். அனைவரும் கலந்துகொண்டு பயனடைய வேண்டுகிறோம். இத்தகவலை ஆர்வமுள்ள புதிய அன்பர்களுக்கும் தெரிவிக்க வேண்டுகிறோம்.

ஞானமுகாம் பற்றிய விவரம் இவ்விதழில் கொடுக்கப்பட்டுள்ளது.

மேலும் நமது ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் பிறந்த தினமான 12-09-2021 அன்று நாம் அனைவரும் **ஞானியர் தினமாகக்** கொண்டாட இருக்கிறோம். இத்தினத்தில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் **புதிய உலகம் படைப்போம்** எனும் சமுதாய நல் மாற்றத்தை ஏற்படுத்தும் நூலினை ஒவ்வொருவரும் சமுதாய அக்கறை கொண்ட நல்ல நண்பர்கள், சிந்தனையாளர்கள், உறவினர்கள், என அனைவருக்கும் வழங்கி இப்புத்தகத்தின் கருத்து சாரத்தை அவர்களுக்கும் தெரிவிக்க வேண்டுகிறோம்.

இதனை ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களாகிய நாம் அனைவரும் தாமே முன்வந்து தமது கடமையாகச் செய்ய வேண்டுமென்று அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இது பற்றிய முழுவிவரமும் இவ்விதழில் கொடுக்கப்பட்டுள்ளது.

நாம் அனைவரும் ஒருமித்த செயலாக ஸ்ரீபகவத் ஐயாவின் பிறந்த நாளான ஞானியர் தினத்தில் புதிய உலகம் படைப்போம்! சமுதாயத்தின் நல்ல மாற்றத்திற்கு நாம் ஒரு விதையாக இருப்போம்.

வாருங்கள் ஒன்றிணைவோம்! வளமான சமுதாயத்தை உருவாக்குவோம்!!

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555
This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075



# உணர் மனம்

- ஸ்ரீ பகவத்

நீங்கள் குடியிருக்கும் தெருவுக்குப் பக்கத்துத் தெருவில் இருக்கும் கடையில்எப்போதாவது ஏதாவது பொருட்களை நீங்கள் வாங்குவதுண்டு.

அன்றைக்கு நீங்கள் அந்தக் கடைக்குச் செல்ல வேண்டியது இருந்தது. அந்தக் கடையில் வழக்கமாகக் கடைக்காரர்தான் இருப்பார். நீங்கள் போகும்போது கடையில் அவர் இல்லை. அவருக்குப் பதிலாக அவருடைய மகன் கடையைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

நீங்கள் வாங்க வேண்டிய பொருளை அவனிடம் கேட்கவும் அவன், "இந்தப் பொருள் அதிகமாக விற்பனை ஆகாது. ஆகவே அதை நாங்கள் பெரும்பாலும் விற்பது கிடையாது. ஆனால் நீங்கள் ஆர்டர் கொடுத்து விட்டுப் போனால் நாளைக்கு இதே நேரத்தில் உங்களுக்கு டெலிவரி கொடுத்துவிடுவோம்," என்று கூறினான்.

நீங்களும் அந்தப் பொருளுக்கான முழுப்பணத்தையும் செலுத்தி ஆர்டர் கொடுத்துவிட்டுத் திரும்புகிறீர்கள்.

மறுநாள் அதே நேரத்தில் மீண்டும் அந்தக் கடைக்குப் போகிறீர்கள்.

நீங்கள் போகும்போது கடைக்காரர் மற்றும் அவரது மகன் ஆகிய இருவருமே கடையில் இருக்கிறார்கள்.

ஆர்டர் கொடுத்த பொருளை நீங்கள் கேட்கவும், அவர்கள் இருவரும் தாங்கள் அப்படி ஒரு ஆர்டரை வாங்கவில்லை என்று கூறி விடுகிறார்கள்.

உங்களுக்கும் குழப்பம்; அவர்களுக்கும் குழப்பம்.

ஆனால் சீக்கிரமே அந்தக் குழப்பம் தீர்ந்து விடுகிறது.

அந்தக் கடைக்காரருக்கு இரண்டு பையன்கள். இருவரும் இரட்டைக் குழந்தைகள். ஒன்று போலவே இருப்பார்கள்.

முதல் நாள் நீங்கள் அண்ணனிடம் ஆர்டர் கொடுத்துள்ளீர்கள். மறுநாள் போகும்போது அண்ணனுக்குப் பதிலாக தம்பி இருந்திருக்கிறான்.

நாம் எப்போதும் உணர்ந்து கொண்டிருக்கும் உணர் மனதையுங்கூட இவ்வாறுதான் அறிகின்றோம்.

**உணர் மனம்** என்பது ஒவ்வொரு கணந்தோறும் புதிது புதிதாகவே அமைந்துள்ளது. ஆனால் ஒரே உணர் மனம் செயல்படுவதாக நாம் எண்ணிக் கொண்டிருக்கிறோம்.

புதிது புதிதாக அது வந்தாலுங்கூட அவை ஒன்று போலவே தோற்றமளிப்பதால்,

ஓர் உணர் மனமே தொடர்ந்து நீடிப்பது போல் நாம் உணர்கின்றோம்.

இந்த உணர் மனம் என்பது என்ன?

எந்த உணர்வுகளை எல்லாம் இந்தக் கணத்தில் உணர்ந்து கொண்டிருக்கிறோமோ அவை எல்லாம் உணர் மனமே.

இந்தக் கணத்தில் அப்படி எவற்றை எல்லாம் உணர்ந்தறிகிறோம்?

நமது உடலின் மூலம் பலவற்றை அறிகிறோம். அதுபோல் நம் மனதின் மூலமும் பலவற்றை அறிகிறோம். - உணர்கிறோம்.

இவை அனைத்தும் உணர் மனமே. இவை மட்டுந்தானா?

"நான் இருக்கிறேன்" என்று நம்மை உணர்கிறோம். பலவிதமான அனுபவங்களும் நமக்கு ஏற்படுவதாக நாம் உணர்கிறோம்.

இந்த "நான்" என்பதும் உணர் மனமே.

பிறந்தது முதல் இன்று வரை நிரந்தரமாக இருப்பதாக நம்மை நாம் எண்ணி வருகிறோம்.

அப்படிதான் நமக்குத் தோன்றுகிறது. ஆனால் அப்படி நிரந்தரமான எவரும் இங்கு கிடையாது.

நமது மனதில் பதிந்து கிடக்கும் நம்மைப் பற்றிய நினைவுக் குறிப்புகளின் அடிப்படையில் நம்மை ஒரு நிரந்தர நபராக சித்தரித்துக் கொள்கிறோம்.

உண்மையில் நான் எனும் அம்சம் - உணர் மனதின் அம்சம், கணத்திற்குக் கணம் புதிதானது.

நமது மன இயக்கத்தை நமது சாஸ்திரங்கள்

**அந்தக்கரணம்** எனப் பெயரிட்டு அழைக்கின்றன.

இந்த அந்தக்கரணமானது, **மனம், புத்தி, சித்தம், அகங்காரம்** என நான்கு விதமாகச் செயல்படுகின்றது.

இதனுடைய முதல் வகைச் செயல்பாட்டையே **"மனம்"** என்ற பெயரில் விவரிக்கின்றனர்.

மனம் என்ற இந்தப் பகுதியையே நாம் உணர் மனம் என்று குறிப்பிடுகிறோம்.

நாம் பொதுவாக அந்தக்கரணம் முழுவதையுமே மனம் எனும் பெயரிட்டு அழைக்கும் வழக்கமும் உண்டு.

ஆகவே நாம் மனம் என்று குறிப்பிடும்போது அது மொத்த மனதைக் குறிப்பிடுகிறதா அல்லது முதலாவது பகுதியான உணர் மனதைக் குறிப்பிடுகிறதா

– என்ற தடுமாற்றம் நமக்கு ஏற்பட்டு விடுகின்றது.

ஆகவே அந்தக்கரணம் முழுவதையும் குறிக்கும் வகையில் அதனை **முழு மனம்** அல்லது **Total Mind** என்று குறிப்பிடலாம்.

அந்தக்கரணத்தில் முதலாவது பகுதியாக வருவதை **உணர் மனம்** என்று குறிப்பிட்டுக் கொள்ளலாம்.

முழு மனம் என்பது 100% சக்தி உடையது. அது செயல் திறம் மிகுந்தது.

அதனுடைய ஒரு சிறிய பகுதி மட்டுமே இந்த உணர் மனமாகும்.

முழு மனதை ஒப்பிடும்போது உணர் மனதின் சக்தியானது வெறும் 25 % மட்டுமே யாகும்.

முழு மனம் என்பது நிகழ்காலத்தில் செயல்படுவது. அது எதிர்காலம் பற்றிய தேவையற்ற கற்பனைகளை ஏற்படுத்திக் கொள்வதில்லை.

ஆனால் உணர் மனம் அப்படியன்று. அது பலவற்றைக் கற்பனை செய்து காட்டும். சாதக – பாதகமான அம்சங்களையெல்லாம் எடுத்துக் கூறும் ஆலோசகராகச் செயல்படுவதே அதனுடைய பணியாகும்.

நாம் இருட்டுக்குள் ஒரு கரடுமுரடான பகுதியில் நடந்து செல்வதாக வைத்துக் கொள்வோம்.

இந்நிலையில் நமது உணர் மனமானது நாம் இடறி விழுந்து விடுவதற்கான ஆபத்துகளையெல்லாம் எடுத்துக் கூறி நம்மை பயமுறுத்துகின்றது.

அந்நிலையில் நாம் இடறி விழுந்து விட்டதாகவே வைத்துக் கொள்வோம்.

இப்போது நமது முழு மனம் செயலுக்கு வந்து நாம் எழுந்து கொள்கிறோம்.

உணர் மனம் செயல்படும் போது "இப்படி ஆகிவிடுமோ – அப்படி ஆகிவிடுமோ" என்ற தடுமாற்றம் இருக்கும்.

ஆனால் முழு மனம் செயல்படும்போது அத்தகைய தடுமாற்றம் எதுவும் இல்லாமல் நம்மை எழுந்து நிற்க வைக்கும் செயல் மட்டுமே ஏற்படும்.

அந்தச் செயல் முடிந்ததும், முழு மனம் விடைபெற்றுச் சென்றுவிடும்.

அதன்பிற்கு உணர் மனம் மீண்டும் செயலுக்கு வந்து 'என்னென்ன செய்ய வேண்டும், என்னென்ன செய்யக் கூடாது' என அலட்டிக் கொள்ள ஆரம்பிக்கும்.

முழு மனதினுள் உணர் மனம் அடங்கி விடும். ஆனால் உணர் மனதினுள் முழு மனம் அடங்காது.

நமது செயல்கள் அனைத்தையும் நிறைவேற்றும் பொறுப்பு முழு மனதிடம் மட்டுமே உள்ளது. அது இந்த உணர் மனதிடம் கிடையாது.

தேவையான செய்திகளை சேகரித்துக் கொடுக்கும் ஏஜெண்ட் மட்டுமே இந்த உணர் மனம்.

உணர் மனதின் எல்லைக்குள் முழு மனம் எட்டாத காரணத்தினால் பல சந்தர்ப்பங்களில்,

இந்த முழு மனதின் பொறுப்புகளையும் கூட உணர் மனதானது சுமந்து கொண்டு திண்டாடி விடுகிறது.

முழு மனதானது பொறுப்புடன் செயல்படுமே யொழிய, எந்தப் பொறுப்புகளையும் சுமந்துகொண்டு திண்டாடுவதில்லை.

அங்கு செயல் மட்டுமே உண்டு.

பொறுப்பைச் சுமக்கும் கடமை எதுவும் முழு மனதுக்குக் கிடையாது.

உணர் மனதின் பணி என்ன?

உணர் மனதின் கடமை என்ன?

உணர் மனதில் பிரச்சினை என்ன?

அஞ்ஞானம் என்னும் அறியாமையில் இருப்பதுதான் உணர் மனதினுடைய பிரச்சினை.

ஞானமடைந்து விடுதலையுடன் செயல்பட வேண்டுவதுதான் அதனுடைய கடமை.

முழு மனது 100% சக்தியுடனும், உணர் மனமானது 25% சக்தியுடனும் செயல்படுவதாகப் பார்த்தோம்.

இப்போது இந்த உணர் மனதை மட்டும் பார்ப்போம்.

இந்த உணர் மனமானது **இரண்டு விதமான** செயல்பாடுகளைக் கொண்டுள்ளது.

செய்திகளைச் சேகரித்து, அதனைத் தரம் பிரித்துக் கொடுக்கும் messanger – தகவல் அளிப்பவராக மட்டுமே இது செயல்படுகிறது.

ஆகவே,

1. உணர்ந்து அறியும் தன்மை

2. புரிந்து கொள்ளும் தன்மை

– என இரண்டு பகுதியாக இருந்து உணர் மனம் செயல்படுகிறது.

முதற்பகுதி உணர்வு பூர்வமானது.

இரண்டாம் பகுதி அறிவுப்பூர்வமானது.

இவை இரண்டும் சேர்ந்து செயல்படுவதுதான் உணர் மனமாகும்.

இந்த உணர் மனதின் உணர்வுப் பகுதி 75% சக்தியுடனும், அறிவுப் பகுதி 25% சக்தியுடனும் செயல்படும் வகையில் அமைந்துள்ளது.

நாம் ரோட்டில் நடந்து செல்வதாக வைத்துக் கொள்வோம்.

ரோடு எப்படி அமைந்துள்ளது, வாகனங்கள் என்னென்ன வருகின்றன என்பன போன்ற விபரங்களை நாம் நமது பார்வையின் மூலமாகவும், சப்தங்களின் மூலமாகவும் உணர்ந்து அறிகின்றோம்.

இப்படி உணர்ந்து அறிவதுதான் உணர் மனதின் பிரதானமான பகுதி.

அப்படி உணர்ந்து கொண்டவற்றை,

இது ரோடு, இது வாகனம் என அறிவுப்பூர்வமாகப் புரிந்து கொள்கிறோம்.

இப்படிப் புரிந்து கொள்வது, உணர் மனதின் இரண்டாவது பகுதி.

உணர் மனதின் உணர்வுப் பகுதி 75% முக்கியத்துவத்துடனும் அறிவுப் பகுதி 25% முக்கியத்துவத்துடனும் செயல்படுவதுதான் ஆரோக்கியமான உணர் மனதின் அறிகுறி ஆகும்.

அதுதான் விடுதலையுற்ற மனதின் செயல்பாடு ஆகும்.

25% மட்டுமே செயல்பட வேண்டிய அறிவுப் பகுதி அதன் எல்லையைத் தாண்டி செயல்படும்போது அது 75% செயல்படவேண்டிய உணர்வுப் பகுதியை அந்த அளவுக்கு பாதித்து விடுகின்றது.

25%ஐத் தாண்டி அறிவுப் பகுதி செயல்பட வேண்டிய அவசியம் ஏன் ஏற்படுகிறது?

உணர் மனமானது தகவல் கொடுக்கும் வேலையை மட்டும் கவனியாமல்,

வேலைகளைச் செய்து முடிக்கும் பொறுப்புகளையும் எடுத்துக் கொள்ளும்போது

– அது அந்த அளவுக்கு உணர் மனதின் அறிவுப் பகுதிக்கு முக்கியத்துவத்தை வழங்கி விடுகிறது.

விளைவு?

உணர் மனதின் உணர்வுப் பகுதி தனது செயல்பாடுகளை அறிவுப் பகுதிக்கு விட்டுக் கொடுத்து விடுகிறது.

அறிவுப் பகுதி பொறுப்பற்றிருக்குந் தோறும்

உணர்வுப் பகுதி சுதந்திரமடைந்து செயல்பட ஆரம்பிக்கிறது.

உணர் மனதின் **உணர்வுப் பகுதியின் சுதந்திரமான செயல்பாடே விடுதலையுற்ற உணர் மனதின் செயல்பாடு ஆகும்.**

உணர் மனதின் அறிவுப் பகுதி பொறுப்பற்றிருப்பது எவ்வாறு?

ஆன்மிக மற்றும் மத ரீதியான அணுகுமுறைகளில் இறைவனை வழிபடுவதும், அவனைச் சரணடைவதுமே பெரும்பாலும் வலியுறுத்தப்படுகிறது.

நமது பொறுப்புகள் அனைத்தையும் இறைவனது காலடியில் சமர்ப்பித்து விட்டு இறைவனைச் சரணடைந்து நமது உலகியல் வாழ்க்கையை மேற்கொள்ளுமாறு

– வலியுறுத்தப் படுகிறது.

இது மத ரீதியான நம்பிக்கை போன்று மேம்போக்காகத் தோன்றினாலும் இது அறிவியல் ரீதியான அணுகுமுறையே ஆகும்.

இறைவனிடம் பொறுப்புகளை ஒப்படைப்பதும் ஒன்றுதான்,

முழு மனதிடம் பொறுப்புகளை ஒப்படைப்பதும் ஒன்றுதான்.

இறைவனை நம்புவதும் ஒன்றுதான்; நமது முழு மனதினை நம்புவதும் ஒன்றுதான்.

விளைவு?

நமது உணர் மனதின் அறிவுப் பகுதியானது எந்தப் பொறுப்புகளையும் எடுத்துச் சுமக்காமல் இருந்து விடுகின்றது.

சேகரித்த செய்திகளை வழங்கும் தகவல் தொடர்பாளராக மட்டும் இருந்து விடுகிறது.

இதனால் நம் உணர் மனதின் உணர்வுப் பகுதியானது தன்னை விரியத் திறந்து கொள்ளுகிறது.

மொத்த உணர் மனமே, ஏற்றுக்கொள்ளும் மனநிலைக்கு–**Receptive Mode** க்குச் சென்றுவிடுகிறது.

ஏற்றுக் கொள்ளும் மனந்திறந்த மனநிலைதான் அன்பு செயல்படும் மன நிலையாகும்.

இந்நிலையில் நமது உணர் மனமானது, தான் எதிர்கொள்ளும் அனைத்தோடும் இணைந்து பொருந்திக் கொள்கிறது.

அது தன்னோடும் தனது மன இயக்கத்தோடும் மனந்திறந்த நிலையில் முரண்பாடற்றுப் பொருந்திக் கொள்கிறது.

நாம் ஈடுபடும் அனைத்து புறச் செயல்களிலுங்கூட நம் உணர் மனம், மனந்திறந்த நிலையில் இணைந்து பொருந்திக் கொள்கிறது.

பலன்களில் பற்று வைக்காமல், ஏற்பட்ட கடமைகளில் ஈடுபாட்டோடு இணைந்து கொள்வதை வலியுறுத்தும் பகவத்கீதையின் செயல்பாடு கூட,

– இயற்கையாகவே இங்கு நிகழ்ந்து விடுகின்றது.

★




# கேள்வி பதில்...

## “ஞானமடைய என்ன தகுதி வேண்டும் ?”

K.S. ஜீவமணி
செல் : 97891 65555




**கேள்வி** : ஆன்மிகத்தின் உயர்ந்த நிலை ஞானமும் முக்தியும். இது தீவிர முயற்சி செய்பவர்களில் கோடியில் ஒருவருக்குத் தான் கிடைக்கும் வாய்ப்பு இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. ஆனால் ஸ்ரீபகவத் ஐயாவின் அணுகுமுறையில் வினாடி நேரத்தில் ஞானமடைய முடியும் என்று சொல்லுகிறீர்கள். ஞானம் பெற ஆன்மிக தத்துவங்களையோ, வேதங்களையோ, உபநிஷத்துகளையோ கற்கத் தேவையில்லையா? ஞானம் பெறுவதற்கான தகுதிகள் எவை? ஞானத்தைப் பெறுவது எவ்வாறு?

**பதில்** : இந்தக் கேள்விக்கான பதிலாக ஸ்ரீபகவத் அய்யா வழங்கும் ஞானப் புரிதலைப் புரிந்து கொண்ட ஒரு குடும்பப் பெண்மணியின் யதார்த்தமான அனுபவ உரையே பலருக்கும் உதவும் என்ற அடிப்படையில் இங்கு பதிவிடுகிறோம்.

இனி அந்தப் பெண்மணி...

“ஞானம் என்பது ஆன்மிகத்தின் உயர்ந்த நிலை மட்டுமல்ல. மனித குலத்துக்கே மிகவும் அவசியமானது என்பது, அதைப் புரிந்துகொண்ட பிறகே உணர முடிகிறது.

ஏனென்றால் மனசு இல்லாதவங்க என்று எவரும் இல்லை. மனசை பயன்படுத்திதான் நாம் இந்த வாழ்க்கையை வாழ்ந்துகிட்டு இருக்கிறோம்.

மனசு வழியாகத்தான் நாம் எல்லாவற்றையும் புரிந்து கொள்கிறோம்.

அப்படி இருக்கும்போது, மனசு எப்படி செயல்படுகிறது என்று தெரிந்துகொள்வது எவ்வளவு முக்கியமானது.

இவ்வளவு முக்கியமாகத் தெரிந்துகொள்ள வேண்டிய மனதின் இயக்கத்தை தெரிந்து புரிந்து கொள்வதைத்தான் ஞானம் என்று சொல்லுகிறார்கள்.

அப்படிப்பட்ட ஞானத்தைப் பெறுவதற்கான தகுதி என்ன என்று பார்ப்போம்.

பொதுவாக பெரும்பாலானவர்கள் என்ன நினைக்கிறாங்க என்றால்,

ஆன்மிகத்தின் ஆரம்பம் பக்தி, பூஜை, அனுஷ்டானம், அப்புறம் தியானம். அதன்பிறகு ஆன்மிகத்தின் உச்சம் ஞானம். அதை அடைய வேண்டுமென்றால் வேதங்கள், உபநிஷத்துகள் கற்றுக்கொண்டு அதன்பிறகு தீவிரமாக தியானம் செய்திருக்க வேண்டும் என்று நினைக்கிறாங்க.

இப்படி தீவிரமாக முயற்சி செய்தால் என்றாவது ஒருநாள் ஞானம் கிடைக்கும் என்று நினைத்துக் கொண்டு நிறையபேர் இருக்கிறாங்க.

இதுதான் ஞானத்தைப் பெறுவதற்கான தகுதி என்று பலரும் நினைத்துக்கொண்டு இருக்கிறாங்க.

ஆனால் உண்மை அப்படி இல்லை.

ஞானம் என்பது அறிவுப்பூர்வமான புரிதல்தான். அதற்கு பயிற்சிகளோ தியானங்களோ தேவையில்லை.

வேதங்கள், உபநிஷத்துகள் என்ன சொல்லுகின்றன என்று தெரிந்திருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை.

நம்முடைய மனதின் இயக்கம், இயற்கையில் எப்படி இயங்குகிறது என்று புரிந்து கொள்ளுவதுதான் ஞானம்.

நாம் எல்லோரும் புறத்தில் நம்மையும் நம் சூழ்நிலையையும் நல்லபடியாக வைத்துக்கொள்ள வேண்டும் என்று நினைக்கிறோம்.

நம்முடைய மனசையும் நல்ல நிலையில் வைத்துக்கொள்ள வேண்டும் என்றுதான் எல்லாரும் எப்பவும் முயற்சி செய்வோம்.

நம்முடைய புறச் சூழலை நல்லபடியாக வைத்துக்கொள்ள என்ன பண்ணனும்ன்னு எல்லோருக்கும் தெரியும்.

அதே மாதிரி நம்ம மனசையும் நல்லபடியாக வைத்துக் கொள்ள என்ன செய்ய வேண்டும்?

நன்றாகத் தியானம் பண்ணணும். கெட்ட எண்ணம் வராம பார்த்துக்கணும். மனசை எப்பவும் தூய்மையாக வச்சுக்கணும்னுதான் நானும் நினைச்சிட்டு இருந்தேன்.

நான் மட்டும் இல்லை. பெரும்பாலானவங்க

அப்படிதான் நினைத்துக் கொண்டு இருக்கிறாங்க.

ஆனா நாம் இங்கே புரிந்துகொள்ள வேண்டியது என்னவென்றால்,

நம்ம மனசுல வரக் கூடிய எண்ணங்களும் உணர்வுகளும் நமக்குக் கட்டுப்பட்டதல்ல என்பதைத்தான்.

அவைகளை சரி செய்ய வேண்டிய அவசியமும் எதுவும் நமக்கு இல்லை.

அவையெல்லாமே எப்படித் தாமாக தோன்றியதோ அப்படித் தாமாகவே மறைந்துவிடும் என்பதுதான் உண்மை.

இந்த உண்மையைப் புரிந்துகொண்டு மனதை நிர்வாகம் செய்யக்கூடிய எந்த வேலையும் நமக்கு இல்லை என்கிற உண்மையைப் புரிந்து கொள்வதுதான் ஞானம்.

இந்த ஞானத்தை, அதாவது நாம் புரிந்து கொண்டதை செயல் படுத்த வேண்டிய அவசியம் எதுவும் இல்லை.

புரிஞ்சிகிறதோடு ஒட்டுமொத்த வேலையும் முடிந்து விடுகிறது.

இது வெறும் புத்திபூர்வமான புரிதல்தான்.

அறிவுபூர்வமான புரிதல்தான்.

இதை சரியாகப் புரிஞ்சுகிட்டால் போதும்.

வேறு ஏதாவது ஆன்மிக தத்துவங்கள், வேதங்கள் என்ன சொல்லுகிறதுனு தெரிஞ்சிக்க தேவையில்லயானு கேட்டால்,

தேவை இல்லை என்பதுதான் உண்மை.

மனசு எப்படி செயல்படுது என்பதும், அது தன்னைத் தானே சரி செய்துகொள்கிறது என்பதும். நமக்கு அங்க எந்த வேலையும் இல்லைனும் தெரிஞ்சுகிட்டால் போதும்.

இந்த உண்மையைதான் வேதங்கள், சாஸ்திரங்கள், தத்துவங்கள் என எல்லாமே சொல்லுகின்றன.

நான் மனசைப் பற்றிய உண்மையை மட்டும்தான் புரிஞ்சுக்கிட்டேன். எனக்கு வேற எதுவும் தெரியாது.

என்னிடம் வேதத்தை பற்றி கேட்டாலோ, தத்துவங்கள் பற்றி கேட்டாலோ எனக்கு உண்மையில் எதுவும் தெரியாது.

ஆனால் இந்தப் புரிதலே எனக்கு விடுதலையைக் கொடுத்து விட்டது.

எனக்கு எப்பவுமே கடவுள் பக்தி உண்டு. ஆனால் நான் தீவிரமாக தியானம் பண்ணியது கிடையாது. அதேமாதிரி எனக்கு படிக்கறதுனா ரொம்ப கஸ்டம். அய்யாவின் புத்தகத்தைக் கூட நான் அதிகம் படிச்சதில்லை.

அய்யாவின் பேச்சை கேட்பேன். அய்யாமேலேயும் எனக்கு ரொம்ப பக்தி உண்டு. அய்யாவின் பேச்சைக் கேட்டுதான் நான் இந்த ஞானத்தை புரிஞ்சுக்கிட்டேன்.

நீங்கள் எல்லோரும் ஆன்மிகத்தில் அதிகம் தேடியிருப்பிங்க.

நான் உங்க அளவுக்கு தேடியதுமில்லை. முயற்சி செய்ததுமில்லை.

ஆனால் மிக முக்கியமான விஷயம் என்னவென்றால், நாம் வைத்திருக்கிற கருத்துகள்தான் சரி என்று பிடிவாதம் இல்லாமல் இருக்க வேண்டும். அப்போதுதான் திறந்த மனதோடு என்ன சொல்ல வராங்கனு புரிஞ்சுக்க முடியும்.

புரிதலுக்கு முன்னாடியும் பின்னாடியும் எனக்கு ரொம்ப மாற்றம் தெரிகிறது.

இப்ப நான் எந்தப் பிரச்சினையிலும் சிக்கிக்கொள்வது இல்லை. அந்தப் பிரச்சினை சம்பந்தமாக வெளியில் என்ன வேலை இருக்குனு பார்ப்பேன். அதில் கவனத்தை செலுத்துவேன். மனசுல எப்படி இருந்தாலும் சரி. அது இயற்கையாக வந்தது. அதை இயற்கையே பார்த்துக்கொள்ளும். எனக்கு மனசு சம்பந்தமாக எந்த வேலையும் இல்லைனு முடித்துக்கொள்வேன்.

என்னோட இந்தத் தகுதிக்கே எனக்கு ஞானம் கிடைக்குது. இதை புரிஞ்சுக்க முடியுது. எல்லா பிரச்சனைகளில் இருந்தும் விடுபட முடியுதுனா வேறு என்ன வேணும்னு பாருங்க. இந்த அளவுக்கு இருந்தாலே போதும்.

மற்றவர்களுக்கு வகுப்பு எடுக்க வேண்டுமானால், நமக்கு வேதம் தெரிஞ்சிருக்கணும், தத்துவம் தெரிஞ்சிருக்கணும் என்ற அவசியம் இருக்கலாம். எனக்கெல்லாம் அதிலிருந்து கேள்விகள் கேட்டால் எதுவுமே தெரியாது.

பெண்கள் யாராவது அவங்க பிரச்சனையைச் சொல்லி, கேள்வி கேட்டால் பதில் சொல்லத் தெரியுமே தவிர, வேதத்திலிருந்தும் சாஸ்திரத்திலிருந்தும் கேள்வி கேட்டால் எனக்கு எதுவும் தெரியாது. மேலும் ஆன்மாவைப் பற்றி கேள்வி கேட்டால் எனக்கு எதுவுமே தெரியாது.

மனசு என்றால் என்னவென்று தெரிஞ்சுக்கிட்டேன். இப்ப நானும் ரொம்ப நிம்மதியாக இருக்கிறேன். உண்மையிலேயே ஞானத்தோட பலனை அடையனும் என்றால், இதைப் புரிந்துகொண்டால் மட்டும் போதும்.

வேதங்கள், உபநிஷத்துகள், ஆன்மிக தத்துவங்கள் அனைத்தும் மிக உயர்வானவைதாம். இவை அனைத்தும் பேசுவது நம் மனதின் இயக்கத்தைப் பற்றித்தான்' இவ்வாறு அந்த பெண்மணி கூறுகிறார்.

**இ**துவரை வந்த ஆன்மிக தத்துவங்கள் அனைத்தையும் பாமரமக்களும் புரிந்துகொள்ளும்

வகையில் எளிமைப் படுத்தியிருக்கிறார் ஸ்ரீபகவத் அய்யா அவர்கள். எந்த வேதங்களையும் உபநிஷத்துக்களையும் எதையும் படிக்காத ஆன்ம விசாரம் எதிலும் கலந்து கொள்ளாத ஒரு குடும்ப பெண்மணி, மனதின் இயக்கத்தை புரிந்து கொண்டு மனதின் பிடியில் இருந்து விடுதலை அடைந்திருக்கிறார் என்றால், அதுதான் ஞானத்தின் எளிமை.

நாம் அடையவேண்டியது ஞானமும் முக்தியும்தானே தவிர வேறு எதுவும் இல்லை. அதை எந்த அணுகுமுறையில் வேண்டுமானாலும் அடையலாம். ஏனெனில் உண்மை எப்போதும் எளிமையாகவே இருக்கிறது.

திறந்த மனமும், தெரிந்துகொள்ளவேண்டும் என்ற ஆர்வமும் மட்டுமே ஞானத்தை அடைய அடிப்படையான தகுதியாகும்.



# ஜென் கதை

## "கானல் நீர்"

இளைஞன் ஒருவன் தன் மனதில் ஏற்படும் எதிர்மறை எண்ண உணர்வுகளைப் போக்க பல வழிகளில் முயன்று பார்த்தான். மனதை சரிப்படுத்தும் எந்த முயற்சியும் அவனுக்கு போதிய நிறைவையும் தெளிவையும் தரவில்லை. நெடுநாட்கள் விடைதேடினான். இறுதியாக ஒரு ஞானியைச் சந்தித்து தன் பிரச்சினைகளைக் கூறினான்.

"மனம் நமக்கு கட்டுப்பட்டது அல்ல. அதனால் ஏற்படும் பிரச்சனைகளை ஏற்றுக் கொள்வதைத் தவிர நமக்கு வேறு எந்த வழியும் இல்லை" என்பதைத் தெரிவித்தார் ஞானி.

இளைஞனுக்கு மனம் சற்று ஆறுதலாக இருந்தது, ஞானியின் பேச்சு.

"நான் கொஞ்ச நாட்கள் உங்களிடம் தங்கிச் செல்கிறேன்" என்றான்.

"சரி" என்றார் ஞானி.

மனப் பிரச்சினை அனைத்தையும் ஏற்றுக் கொள்ளத் தொடங்கினான். மனம் லேசானது. இப்பொழுது தான் மிகவும் இலகுவாகி இருப்பதாகவும் உணர்ந்தான்.

இனி என் மனம் பிரச்சினை இல்லாமல் வாழத் தொடங்கிவிடும் என்று கூறி ஞானியிடம் இருந்து விடைபெற்றான்.

மீண்டும் யதார்த்த வாழ்க்கை, அதே மன வருத்தம், மன வேதனை, விரக்தி மனநிலை என ஒன்றன் பின் ஒன்றாக தொடர்ந்து தாக்கத் தொடங்கியது இளைஞனை.

மீண்டும் அவசரமாக தன்னுடைய காரை எடுத்துக் கொண்டு ஞானியை பார்க்கச் சென்றான் இளைஞன்.

தனக்கு நடந்த நிகழ்வுகள் அனைத்தையும் கூறிவிட்டு களைத்துப் போனான். "எதையும் ஏற்றுக் கொள்ளும் முறை இப்போது உதவ இல்லையே ஏன்?" என்ற கேள்வியை கேட்டான்.

சில நாட்கள் தன் ஆஸ்ரமத்தில் தங்கிச் செல்லுமாறு கூறினார் ஞானி.

அடுத்த நாள் காலை இளைஞனுடன் காரில் அமர்ந்து கொண்டு உச்சி வெயிலின் போது ஒரு பயணத்தை மேற்கொண்டார்.

சாலையில் அங்கங்கே வெயிலினால் கானல்நீர் தென்பட்டது.

"சாலையில் தண்ணீர் அங்கங்கே இருக்கிறது. பார்த்து செல்" என்றார் இளைஞனிடம்.

ஞானியிடம், "அது கானல் நீர் சுவாமி." என்றான் இளைஞன்.

"கானல் நீருக்காக உன்னுடைய வாகனத்தை நீ ஏன் நிறுத்துவதில்லை?" என்றார்.

"கானல் நீர் என்பது இருப்பதைப் போல் தோற்றம்தான் இருக்கும். உண்மையில் இருக்காது" என்றான் இளைஞன்.

"கானல் நீர் அப்படித்தான் இருக்கும் என்பதை ஏற்றுக்கொண்டு உன்னுடைய பயணத்தை மேற்கொள்கிறாய். அப்படித்தானே?" என்றார் ஞானி.

"ஆமாம் சுவாமி" என்றான் இளைஞன்.

"இப்படித்தானப்பா உன் பிரச்சனையும் இருக்கிறது" என்றார்.

"விளங்கவில்லை விளக்கமாக கூறுங்கள்" என்றான்.

"கானல் நீரும், மன உணர்வுகளை ஏற்றுக்கொள்வதும் ஒன்றுதான். கானல் நீருக்கு

ஒன்றும் செய்ய முடியாது என்று உன் பயணத்தை மேற்கொள்வதை போல், மனோரீதியாக ஏற்படும் அத்தனை எண்ண உணர்வுகளையும் ஏற்றுக் கொள்வதைத் தவிர வேறு எந்த வழியும் இல்லை, என்று ஏற்றுக் கொள்வதுதான் தீர்வு" என்றார் ஞானி.

"அப்படி எனில் எனக்கு மனோரீதியாக ஏற்படும் பாதிப்புகளை கானல் நீர் என்று எடுத்துக் கொண்டு புறத்தில் செயல்பட வேண்டுமா?" என்றான் இளைஞன்.

"ஆமாம், ஏற்றுக் கொள்வதைத் தவிர நமக்கு வேறு எந்த வழியும் இல்லை என்பதை புரிந்துகொண்டு புறத்தில் செயல்படு" என்றார்.

மன இயக்கத்தை ஏற்றுக்கொள்வது என்பது என்ன என்பதை புரிந்துகொண்டு விடுபட்டான் இளைஞன்.

# ஞானமுகாம்
## (ZOOM MEETING வாயிலாக)



ஸ்ரீ பகவத்மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

வாழ்க்கையில் மனப்பிரச்சினைகளில் சிக்கி போராடித் தவிப்பவர்கள் பலர்.

நாம் எதிர் கொள்ளும் எல்லாப் பிரச்சினைகளையும் எளிதாக எதிர்கொண்டு வெற்றி பெறுவதற்கான வல்லமையைத் தரும் புரிதலே இந்த ஞானப் புரிதல். (இத்தகைய வகுப்புகள் OCD பிரச்சினைகளிலிருந்தும் பலரை மீட்டுள்ளன.)

## ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞானமுகாம்–5

வருகின்ற **27–08–2021 வெள்ளிக்கிழமை** முதல் **29–08–2021 ஞாயிற்றுக்கிழமை** வரை நடைபெற உள்ளது.

**காலை**

| | | |
|---|---|---|
| 10:00 am - 11:30 am | - | **1st session.** |
| 11:30 am - 11:45 am | - | **Break** |
| 11:45 am - 1:00 pm | - | **2nd session** |

**மாலை**

| | | |
|---|---|---|
| 6:30 pm - 7:30 pm | - | **3rd session** |
| 7:30 pm - 8:00 pm | - | **Break** |
| 8:00 pm - 9:30 pm | - | **4th session.** |

இந்த ஞானமுகாமில் 95 அன்பர்கள் வரை மட்டுமே பங்கு பெறலாம். கலந்து கொள்பவர்கள் முன் பதிவு செய்து கொள்ள வேண்டுகிறோம்.

நமது ஞானமுகாம் ஞானத் தேடுதல் உள்ளவர்களுக்கு மட்டுமல்லாது கலந்துகொண்ட அனைவருக்குமே மிகவும் பயனுள்ளதாக இருக்கிறது.

ஞான முகாமில் **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்களுடன் **Acu. Hr. உமர் பாரூக்** அவர்களும் உரையாற்ற உள்ளார்.

(ஞானமுகாம்-1ஐ Zoom meeting வாயிலாக ஆரம்பித்தபோது நேரடி முகாம் அளவுக்கு பயனுள்ளதாக இருக்காது என்று எண்ணினோம். ஆனால் இது 100% பயனளித்து விட்டது.)

புதிய அன்பர்கள், உறவினர்கள், நண்பர்கள் என அனைவருக்கும் இத் தகவலை தெரிவித்து அனைவரும் பயனடையச் செய்யுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

இதன் மூலம் வாழ்க்கையில் எல்லா மனப்பிரச்சினைகளையும் எளிதாக எதிர்கொண்டு வாழ்வில் நிறைவாகவும் நிம்மதியாகவும் வாழலாம்.

நன்கொடை ரூபாய் 1000/–.

(புரவலர்களுக்கு நன்கொடை கட்டாயம் இல்லை. விரும்பினால் அவர்களும் வழங்கலாம்.)

நன்கொடை வழங்குபவர்கள்

ஸ்ரீ பகவத்மிஷன் Account HDFC Bank & SBI Bank இவற்றில் எதில் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

**Sri Bagavath Mission**

Hdfc Bank A/c No. : 15907620000075
NEFT IFSC : HDFC0001590

**Sri Bagavath Mission**

SBI Bank A/c No. : 31784345329
IFSC Code : SBIN0012772
**Google pay** : 8531036977

அனைவரும் கலந்து கொண்டு பயனடைய வேண்டுகிறோம்.

மேலும் விபரங்களுக்கு

**ஸ்ரீ பகவத்மிஷன்**

**9994205880, 9789165555, 9443035454**

# ஞானியர் தினத்தில் (12–09–2021) – புதிய உலகம் படைப்போம்

தீவிரமான ஆன்மிகப் பயிற்சி முயற்சியில் ஈடுபடுபவர்களில் கோடியில் ஒருவர் ஞானம் பெறுவதே அரிது என்ற நிலையை மாற்றியவர்.

ஞானம் என்றால் என்னவென்று தெரிந்து கொள்ள திறந்த மனமும் ஆர்வமும் மட்டுமே அடிப்படையான தகுதி என்பதை எடுத்துரைப்பவர்.

ஞானம் அடைவது என்பது மனித குலத்தின் பிறப்புரிமை என்ற நிலைமைக்கு உயர்த்தியவர்.

பலகாலமாக அடைவதற்கு சிரமமாக இருந்த ஞானத்தை பாமரரும் புரிந்து கொள்ளும் வகையில் எளிமையாக்கிவர்.

பல ஞானிகளை உருவாக்கிய மகாஞானிதான் நமது **ஸ்ரீபகவத் ஐயா** அவர்கள்.

ஸ்ரீ பகவத் மிஷன், ஸ்ரீ பகவத் ஐயாவின் பிறந்தநாளை **ஞானியர் தினமாக** கொண்டாடி வருகிறது.

ஸ்ரீ பகவத் அய்யாவின் அணுகுமுறையால் நாம் இதுவரை மனதில் சுமந்து கொண்டிருந்த மன பிரச்சனைகளிலிருந்து விடுதலை பெற்றோம்.

"ஆன்மிகத்தை முடித்துக்கொண்டு அன்றாட அலுவல்களை பாருங்கள்" என்று கூறி நமது நெடுநாள் தேடல்களை முடிவுக்கு கொண்டு வந்தார்.

அகத் தேடுதலை முடித்துக்கொண்டு புறத்தில் மனித குலத்திற்கு தேவையானவற்றை எப்படி நமது புறச்செயலால் சிறப்பாக புதிய உலகத்தை ஏற்படுத்துவது என்ற புதிய அணுகு முறையையும் உருவாக்கிக் கொடுத்துள்ளார்.

மனிதகுலம் ஒட்டுமொத்தமாக எதிர்கொண்டிருக்கும் போரில்லா நல்லுலகம், இராணுவத்தை நாட்டின் வளர்ச்சிக்கு எப்படி பயன்படுத்துவது என்ற புதிய அணுகுமுறைகளையும் எல்லா நாடுகளுக்கும் பொதுவான ஒரு இராணுவ அமைப்பை உருவாக்குவது போன்ற அரிய எதிர்கால சிந்தனையை ஸ்ரீபகவத் அய்யா அவர்களால் உருவாக்கப்பட்ட நூல்தான் புதிய உலகம் படைப்போம் என்ற நூல் ஆகும்

**"எல்லோரும் எல்லாமும் பெற வேண்டும், இங்கு இல்லாமை இல்லாத நிலை வேண்டும்"** என்ற அடிப்படையில் சமுதாய நலனில் இதுவரை யாருமே சிந்தித்திராத புதிய கோணத்தில் **புதிய உலகம் படைப்போம்** என்ற நூல் அய்யாவின் கருத்துக்களைத் தாங்கி வெளியே வந்திருக்கிறது.

ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் ஆகிய நாம், மன இயக்கத்தை புரிந்து கொண்ட பிறகு புறத்தில் தான் செயல்பட வேண்டும் என்ற மாபெரும் உண்மையை விளங்கிக் கொண்டோம்.

அந்த வகையில் புரிந்துகொண்ட நமக்குதான் சமுதாயத்தை மாற்றம் செய்ய வேண்டிய முக்கிய கடமை உண்டு.

இந்த சாத்திய சிந்தனையை, நல்ல சமுதாய மாற்றத்துக்கு தேவையான கருத்தை அனைவருக்கும் தெரிவிக்க வேண்டும். அதற்கு என்ன செய்ய வேண்டும்?

புரிந்துகொண்ட நாம் அனைவருமே ஸ்ரீபகவத் அய்யாவின் பிறந்த நாளான **ஞானியர் தினத்தில்** ஒவ்வொருவரும் குறைந்தபட்சம் தலா **10 பிரதிகள் "புதிய உலகம் படைப்போம்"** என்ற நூலை வாங்கி சமுதாய நலனில் அக்கறை கொண்ட நமது நல்ல அன்பர்கள், நண்பர்கள், சிந்தனையாளர்கள், செயல்வீரர்கள், ஆட்சியாளர்கள் போன்றவர்களுக்கு இந்த நூலை கொடுத்து இதன் கருத்து சாராம்சத்தை தெரிவிப்போம்.

ஸ்ரீபகவத் அய்யாவின் கருத்துக்களைப் புரிந்து கொண்ட நபர்கள் ஒவ்வொருவரும் தாமே முன்வந்து இந்தப் பணியில் தங்களை இணைத்துக் கொண்டு உலகம் முழுவதும் இந்த அரிய உண்மை சென்றடைய நீங்கள் அனைவரும் செயல்பட வேண்டும் என்பதே ஸ்ரீ பகவத்மிஷனின் நோக்கம்.

இந்த **புதிய உலகம் படைப்போம்** என்ற நூல் அச்சிட ரூபாய் 20 செலவாகிறது. பலருக்கும் கொண்டு சேர்க்கும் நோக்கத்தில் ரூபாய் பத்துக்கு ஸ்ரீபகவத்மிஷன் வழங்கி வருகிறது.

மன இயக்கத்தை புரிந்து கொண்ட நாம் ஒவ்வொருவரும் தலா 10 பிரதிகள் அச்சிட செலவாகும் ரூ.20x10 புத்தகம் + 50 கொரியர் சார்ஜ் உட்பட மொத்தம் ரூ.250-யை செலுத்தி பெற்றுக்கொண்டு தங்களது நல்ல நண்பர்கள், அன்பர்கள், சிந்தனையாளர்களுக்கு கொண்டு சேர்க்க வேண்டுகிறோம்.

நீங்கள் இருபது ரூபாய் கொடுத்து வாங்கும் பொழுது, அடுத்த ஒரு பிரதி சமுதாய அக்கறை கொண்ட ஒருவருக்கு சென்றடைவதற்கு உதவுகிறீர்கள் என்ற கருத்தின் அடிப்படையில் ஒவ்வொருவரும் 10 பிரதிகள் + கொரியர் செலவு உட்பட ருபாய் 250 செலுத்தி பெற்றுக்கொண்டு பகவத் ஐயாவின் பிறந்த தினத்தில் நீங்களே வெளியீட்டு விழாவாக கொண்டாடி நல்ல நண்பர்கள், அன்பர்களுக்கு தெரிவித்தால் அதுவே போதுமானது.

நமது ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவரும் எடுக்கும் இந்த முயற்சி சமுதாயத்தில் ஒரு மிகப்பெரிய மாற்றத்தை உருவாக்கும்.

இந்த நூலை அனைவருக்கும் கொண்டு சேர்ப்பதில் ஆர்வம் காட்டியதோடு அதற்கான பெரும் முயற்சி எடுத்து செயல்படுத்தி நமக்கு ஊக்கமளித்த திண்டுக்கல், **வாழ்க வளமுடன், திரு. ஜெயகோபால் ஐயா அவர்களுக்கு** உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

புரிந்து கொண்ட நமது அன்பர்கள் ஒவ்வொருவரும் தாமாகவே முன்வந்து சமுதாயத்தில் முக்கியமான நபர்கள், நண்பர்கள், அன்பர்களுக்கு இந்தப் புத்தகத்தை வழங்கி அவர்களுடன் இணைந்து ஒரு புகைப்படத்தை எடுத்து நமது பிரவாகம் வாட்ஸ்அப் குரூப்களில் பதிவிடும்படி அன்போடு அனைவரையும் கேட்டுக்கொள்கிறோம்.

நாம் ஒவொருவரும் இந்த பத்துப் புத்தகங்களை வெளியிடுவதை ஒரு வெளியீட்டு விழாவாக ஞானியர் தினத்தில் செயல்படுத்துவோம். அதுவே நமது பகவத் மிஷன் நோக்கம்.

31.8.2021க்குள் பணம் அனுப்பி 12.9.2021 அன்று புத்தகத்தை வெளியிட தயாராக வேண்டுகிறோம். எவ்வளவு புத்தகங்கள் வேண்டுமானாலும் பெறலாம்.

ஸ்ரீ பகவத்மிஷன் Account HDFC Bank & SBI Bank இவற்றில் எதில் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

**Sri Bagavath Mission**

| | | |
|---|---|---|
| Hdfc Bank A/c No. | : | 15907620000075 |
| NEFT IFSC | : | HDFC0001590 |

**Sri Bagavath Mission**

| | | |
|---|---|---|
| SBI Bank A/C No. | : | 31784345329 |
| IFSC Code | : | SBIN0012772 |
| **Google pay** | : | 8531036977 |

உங்களது சமுதாய அக்கறையை உறுதி செய்ய வேண்டுகிறோம்.

அன்புடன்

**ஸ்ரீ பகவத்மிஷன். சேலம்.**
**9789165555, 9994205880**

**சேலம் ஸ்ரீபகவத் மிஷனும்**
**திண்டுக்கல் வாழ்க வளமுடன் ஹோமியோ சேவை மையமும்**

இணைந்து நடத்தும்

## "புதிய உலகம் படைப்போம்"

**புத்தக வெளியீட்டு விழா**

நாள் : **12–09–2021** நேரம் : **காலை 11.00 மணி**

இடம் : **வாழ்க வளமுடன் ஹோமியோ சேவை மையம்,**
3, வாழ்க வளமுடன் தெரு, திண்டுக்கல். செல் : **91 50 30 29 04**

**உலகம் சமநிலை பெறவே, உயர்வு–தாழ்விலா நிலை வேண்டும்.**

# அனைவருக்கும் ஓர் அன்பான வேண்டுகோள்



Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீபகவத் மிஷன் மீதும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மீதும் தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட நமது குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் மிஷனில் வருவாய் ஈட்டும் நோக்கத்தோடு எந்தச் செயலும் செய்வதில்லை.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானத் தெளிவை உலகம் முழுவதும் கொண்டு செல்ல வேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கம்.

இதன் காரணமாகவே ஐயாவின் அனைத்து நூல்களையும் மாத இதழ்களையும் இலவசமாக Download செய்து கொள்ளும் வசதியையும் குறைந்த விலையில் ஐயாவின் நூல்களையும் வழங்கி வருகிறோம்.

இது அனைவருக்கும் பயனுள்ள வகையில் இருக்கும்.

மேலும் ஐயாவின் ஆலோசனைப்படி தலைநகரமான சென்னையில் நமது ஸ்ரீ பகவத் பவன் அமைப்பதற்கான முயற்சியையும் செய்துவருகிறோம்.

மாதத்தில் பாதி நாட்கள் ஐயா சென்னையிலும் பாதி நாட்கள் சேலத்திலுமாகத் தங்கியிருப்பார்கள்.

ஸ்ரீபகவத் மிஷனைப் பொறுத்தவரையில் நாம் இரண்டு வகையான செயல்பாடுகளோடு பயணித்து வருகிறோம்.

1) ஐயா வழங்கும் ஞானத்தை உலகம் முழுவதும் எடுத்துச் செல்வது.
2) சென்னையில் ஸ்ரீபகவத் பவனை உருவாக்குவது மற்றும் ஸ்ரீபகவத் மிஷன் – ஸ்ரீபகவத் ஐயாவுக்கான பராமரிப்பு உட்பட அனைத்து அன்றாட நிர்வாகச் செலவுகளையும் எதிர்கொள்வது.

தற்போது புரவலர்களாக இணைந்து மாதம்தோறும் நிதி வழங்குபவர்களின் உதவியால் இதனை ஓரளவுக்கு எதிர்கொண்டு வருகிறோம். ஆனால் நாம் எதிர்கொள்ளும் செலவுகளுக்கு இது மிகவும் பற்றாக்குறையாகவே உள்ளது.

நமது அனைத்துச் செலவுகளையும் முழுமையாக எதிர்கொள்ளவும், சென்னை பகவத் பவன் அமைக்கவும், இதுவரை பெற்ற வட்டியில்லாக் கடனை திரும்பச் செலுத்தவும் ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் ஆகிய நம் அனைவரின் பங்களிப்பும் மிகவும் அவசியம்.

ஐயா மீது ஈடுபாடு கொண்ட நாம் அனைவரும் எளிதான ஒரு சிறிய பங்களிப்பை மட்டும் வழங்கும் பட்சத்தில் இந்த இரண்டாவது அம்சப் பிரச்சினை எளிமையாகிவிடும்.

இதனால் நமது முழுக் கவனத்தையும் முதலாவது முயற்சியை நோக்கி மட்டுமே வைத்துக்கொண்டால் போதும்.

சிறுதுளி பெருவெள்ளம் என்ற வகையில் நாம் அனைவரும் மாதம்தோறும் ரூபாய் 500/- வழங்கும் பட்சத்தில் நமது முழு முயற்சியும் வெற்றி பெறும்.

எனவே ஈடுபாடுகொண்ட உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் மாதந்தோறும் வழங்கி தங்களது பங்களிப்பை உறுதி செய்திடுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

(ரூ.500க்கு அதிகம் வழங்க விரும்புவோர் தங்கள் குழந்தைகள் பெயரிலும் வழங்கலாம்.)

ஸ்ரீ பகவத் மிஷன் Account HDFC Bank & SBI Bank ல் உள்ளது. இவற்றில் எதில் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

1) Google pay - +918531036977
2) **Sri Bagavath Mission**
Hdfc Bank A/c No. - 15907620000075
NEFT IFSC - HDFC0001590
3) **Sri Bagavath Mission**
SBI Bank A/c No. - 31784345329
NEFT IFSC - SBIN0012772

அன்புடன்,
**ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.**

அனைவருக்கும் நல்வாழ்த்துகளுடன்
**ஸ்ரீ பகவத்,**
**Dr.N. கைலாசம், K.S. ஜீவமணி, V.A.P. சரவணன்**